சிவமயம்

# திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறை ஆதீனத்தைச்சேர்ந்த மாயூரமென வழங்கும்

# (திருமயிலாடுதுறைத் தலவரலாறு.)

திருவாவடுதுறை ஆதீனம் 20-ஆவது குருமூர்த்திகளாய் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீலஸ்ரீ அம்பலவாண தேசிக சுவாமிகளின் திருவுள்ளத்தின்படி

இத்தல வரலாறு, மாயூரம் நகராண்மைக்கழக உயர்தரப்பள்ளிக்கூடத் தமிழாசிரியராய் இருந்துவரும் வித்துவான் திரு. சீ. இராமலிங்கம் பிள்ளை அவர்களால் எழுதப்பட்டது.

24—1—49

மாயூரம்,

# பதிப்புரை.



இச்சிறு நூல் திருமயிலாடுதுறைத் தலத்தில் திருக்கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் ஸ்ரீ மாயூரநாதர் அபயாம்பிகை தேவஸ்தானத்தின் வரலாறு, செல்வநிலை, உற்சவம், நிர்வாகம் முதலியவைகளையும், இத்தலத்துக்குள்ள தேவாரம், திருப்புகழ்களையும், முருகன் பிள்ளைத்தமிழ், அபயாம்பிகை சதகம், திருமயிலை வெண்பா அந்தாதி திருமயிலைத் திரிபந்தாதி, மூர்த்திதலம், தீர்த்தம் முதலியவைகளையும் விளக்கிக் காட்டுவது. இதற்கு நம் சைவ உலகம் நன்றி செலுத்தும் கடப்பாடுடையது.

R. K. சுப்பிரமணிய பிள்ளை,

சூப்பரிண்டெண்ட்.

Rajan

4560.

உ

சிவமயம்.

# திருமயிலாடுதுறைத் தல வரலாறு.



மூர்த்திதலந் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர்
வார்த்தைசொலச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே.

**தலமும் இருப்பிடமும்.**—இத்தலம் சோழநாட்டில் தஞ்சை ஜில்லாவில் மாயூரம் தாலுக்காவின் தலைநகராக உள்ளது. சைவ சமயாசாரியார் நால்வரில், திருஞான சம்பந்த சுவாமிகளால் பாடப்பெற்ற தேவாரப் பதிகம் 1 2-ம், திருநாவுக்கரசு சுவாமிகளால் பாடப்பெற்ற தேவாரப் பதிகம் 1-ம் ஆக மூன்று பதிகங்களுடையது. இதன்றியும், ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகளால் திருப்புகழ்1-ம் பாடப்பெற்றிருக்கிறது. ஸ்ரீ கௌரி மாயூரம், திரு மயிலாடுதுறை என்ற பெயர்களையுடையது. இத்தலம் தென் இந்திய ரெயில்வே சென்னை இராமேசுரம் மெயின் லயனில் பெரியதொரு சந்திப்பாக இருக்கிறது. இச் சந்திப்பிலிருந்து நேர்கிழக்கே இரண்டாவது மைலில் இத்தலம் உள்ளது. மாயூரம் ஜங்ஷனிலிருந்து தரங்கம்பாடிக்குப் பிரியும் லயனில மாயவரம் டவுன் என்ற புகைவண்டி நிலையத்திலிறங்கி நேர் வடக்கில் இரண்டு பர்லாங்கு தூரம் சென்றால் வணங்க வரும் அன்பர்களைத் தன்னுடைய அழகிய தோற்றத்தைக் காட்டி வலிந்தழைப்பது போன்றுள்ள பெரியதொரு கோபுரத்தையுடைய திருக்கோயிலை அடையலாம்.

தட்ப வெட்ப நிலைகளமைந்து வாழ்வதற்கு மிகப் பொருத்தமான இத்தலத்தைப் புண்ணிய நதியாகிய காவிரியாறு அழகுக் கழகு செய்து காவிரிப்பூம் பட்டினத்திற்கு ஓடுகிறது, இவ்வூரின் ஜனத்தொகை 33000. இவ்வூரில் பதினைன்கு தரும சத்திரங்களும், நகரத்தார் விடுதிகளும் உள்ளன. இத்திருக்கோயிலின் வடக்குக் கோபுரத்தினின்றும் இரண்டு பர்லாங்கு தூரத்தில் காவிரி ஆறு ஓடுகிறது. மேற்சொன்ன கோபுரத்தி

விருந்து காவிரிக்குச் செல்லக்கூடிய மிகப் பெரியதொரு தெருவாகிய மஹாதானத் தெருவும், அதன் மேல்பாலுள்ள பட்டமங்கலத் தெருவும் மிக்க அழகும் கப்பீரமும் வாய்ந்தவை.

**திருக்கோயில்:**—இக்கோயில் மிகப் பழங் கோயிலாகவே தோற்றமளிக்கிறது. சுமார் 164 அடி உயரமுள்ள ஒன்பது நிலைக்கோபுரம் ஒன்று இவ்வாலயத்தின் கிழக்கு வாயிலை அழகு பெறச் செய்கிறது. இக்கோபுரம் கோயிலைப்போல் அவ்வளவு பழந் தோற்றமுடையதன்று. இது சிவத்தலங்கள் பலவற்றினும் காணப்படும் கோபுரங்களைவிட மிக்க அழகு நிரம்பியுள்ளதாய்க் காணப்படுகிறது. இக்கோயிற்கு நாற்புறங்களிலும் வாயில்கள் உள்ளனவாயினும் கிழக்கு வாயில் தவிர மற்றய மூன்று வாயில்களும் கோபுரங்களை உடையனவாயில்லை. இக்கோயிலின் பரப்பு சுமார் 3 78,913 சதுர அடியாகும். மேற்படி கோயில் தென்பக்கம் மதில் கிழக்கு மேற்காக 719 அடி நீளம் உள்ளது. மேல்பக்கம் மதில் தென்வடக்காக சுமார் 527 அடி நீளம் உள்ளது. சுற்று மதில்கள் செங்கற்களாலானவை. இங்கு இரண்டு வெளிச் சுற்றுலைகளும் (பிரகாரம்) தனித்தனியே இறைவன் இறைவி கோயில்களுக்கு இரண்டு சுற்றுலைகளும் உள்ளன. கொடிமரமும் நந்திதேவரும் அமைந்துள்ள மண்டபத்தின்வரை உட்கோயில் அழகிய முறையில் கட்டப்பட்டுள்ளது. அங்குள்ள அணி வெட்டிக் கால் என்ற தூண்கள் மிக்க வேலைப்பாடமைந்தவை. தேவியார் கோயில் இறைவன் கோயிலுக்கு வடபுறத்தில் கிழக்கு நோக்கி அமைந்துள்ளது. இதுவும் அடிவரை பிரித்துப் புதிதாக அமைக்கப்பட்டுள்ளது.

**மூர்த்திகள்:**—இங்கே கர்ப்பக்கிரஹத்தில் எழுந்தருளியுள்ள இறைவன் சுயம்புமூர்த்தி மனங்கவரும் தோற்றமுடையவர். மாயூரநாதரென்பது இக்கடவுட்கமைந்த திருநாமம். இறைவியின் திருநாமம் அஞ்சலை என்றும் அபயாம்பிகை என்றும் அமைந்துள்ளது: இத்தல விநாயகர் கொடிமரத்திற்குத் தெற்கில் பெரிய விநாயகர் என்ற திருப்பெயருடன் விளங்குகிறார். கொடி மரத்திற்கு வடக்கில் ஆறுமுகப் பெருமான் அமைந்துள்ளார். இவ்வாலயத்தில் குமரகோயில் என்ற முருகப் பெருமானின் கோயில் இறைவன் விமானத்திற்கு நேர் பின்பக்கத்தில் காணப்படுகிறது. இத்தலத்தின் பண்டை ஐதீகத்தை

காட்டக்கூடிய சிவலிங்கவுருவம் ஒன்று வெளிப் பிரகாரத்தில் வடக்கு மதிலையொட்டி கிழக்குமுகமாக ஒருகோயிலில் காணப்படுகிறது. (இக்கோயில் ஆதி மாயூரநாத சுவாமி கோயில் என்றழைக்கப்படுகின்றது) அச்சிறு கோயிலினுள்ளேயே தெற்கு முகமாகத் தாமிரத்தால் செய்யப்பட்ட அம்பிகை வடிவமாகிய மயிலுருவம் காணப்படுகிறது. இறைவன் விமானத்தின் தென்மேற்கு மூலையில் அகத்திய விநாயகர் என்ற விநாயகரின் திருவுருவம் காணப்படுகிறது. இவ்வுருவம் அகத்தியரால் நிர்மாணிக்கப்பட்டு பூசை புரியப்பட்டதாகச் சொல்லப்படுகிறது. களஞ்சிய வெளித் திண்ணையில் களஞ்சியப் பிள்ளையாரென்றும் கணக்குப் பிள்ளையாரென்றும் கூறப்படும் விநாயகர் எழுந்தருளியிருக்கிறார். இக்கோயிலின் களஞ்சிய வாயிலில் நாதசர்மா என்ற பெயருடன் ஒரு சிவலிங்க உருவமும் காணப்படுகின்றது. இறைவி விமானத்தின் தென்புறத்தில் அனவித்யாம்பிகை என்ற சிவலிங்க உருவமும் காணப்படுகின்றது. இத்தலத்திற்கு சூதவனம், சிகண்டிபுரம், பிரம்மபுரம், பிரம்மவனம், தென்மயிலை என்ற வேறு பெயர்களும் உண்டு. பிரம்மதேவர் பூசித்தமையின் பிரமலிங்கமெனவும் எல்லாவற்றையும் கொடுப்பவராதலின் வள்ளலாரெனவும், கௌரியை மணந்து கொண்டதால் கௌரிமாயூரநாதரெனவும் இங்குள்ள இறைவர் அழைக்கப்படுவார்.

அச்சமுற்று அடைக்கலம் அடைந்த மயிலுக்கு அபயம் அளித்துக் காத்தமையின் அபயப் பிரதாம்பிகை, அபயாம்பிகை, அஞ்சல்நாயகி, அஞ்சலை என்னும் நாமங்கள் இங்குள்ள இறைவியாருக்கு வழங்கி வருகின்றன.

ஐதீகங்கள்:—இந்தத்தலத்துப் பெருமானை கௌரியும் இந்திரனும் பிரமனும் வழிபட்டார்கள். பிரகஸ்பதி என்ற தேவகுருவும் வழிபட்டு வாக்குவன்மை பெற்றார். அகஸ்தியர் இத்தலத்தில் முதற் கடவுளாம் விநாயகரையும் இலிங்க உருவத்தையும் அமைத்து வழிபட்டுள்ளார். நாதசன்மாவும் அவர் மனைவி அனவித்தையும் வழிபட்டுச் சிவசாயுச்சிய பதவியையும் பெற்றுள்ளார்கள். திலீபன் என்ற அயோத்தி அரசனும் வழிபட்டுள்ளான் எழுமாதர்களும் இங்குவழிபாடு செய்துள்ளார்கள் இவ்வரலாறுகளுள் கௌரி பூசித்தமையும் நாதசன்மா அனவித்தை இருவரும் முத்தியடைந்தமையும் மிகவும் சிறப்புடையவை.

## தேவியார் மயிலுருவம் பெற்ற வரலாறு.

---

தக்கன் செய்த வேள்வியைச் சிதைக்கும் பொருட்டுச் சிவ பெருமானால் ஏவப்பட்ட வீரபத்திரக்கடவுள் யாகத்தைச் சிதைக்கும்பொழுது, ஆண்டு பக்கத்துச் சோலையிலிருந்த மயில் ஒன்று மிக்க துன்பம் எய்தித் தேவியாரிடம் அடைக்கலம் புக, அம்மையார் மயிலுக்கு அபயம் தந்து காத்தருளினர். பிறகு தான் தன் நாயகர் சொல்லைத்தட்டித் தன்தந்தையாகிய தக்கன் யாகத்திற்குப் போய்வந்தமையால் ஏற்பட்ட இழிவுகருதி தன் உயிரைவிட்டுவிடத் துணிந்து தான் நின்ற நிலையில் அவ்வாறே தனதுதிருமேனியை எரித்துக் கொண்டாள். தான்மறை யும்பொழுது தன்னால் அபயம் அளிக்கப்பட்ட மயிலினது நினைவே அம்மையார் திருவுள்ளத்திலிருந்தது பின்பு தன் கணவனிடம் சொற்கடந்து சென்றதற்கு மன்னிப்பும் அருளும் வேண்ட நினைத்த அளவில் தம் நினைவிலிருந்த அந்த மயிலுருவமே அம்மையாருக்கு உருவமா யமைந்தது. அம்மயிலுருவத்துடன் இத்தலத்திற்கு வந்து இங்கு காணப்பட்ட மாமரத்தின் தளிர்களைத் தன் மூக்கினால் கொய்து வழிபட்டு தன் உண்மை உருவத்தை அடைந்தாள். மயூர (மயில்) உருவமாகிய அம்மையாரால் பூசிக்கப்பட்டதால் இக்கடவுள் மாயூரநாதர் என்று அழைக்கப்படுகிறார். இவ்வூர் மாயூரமென்றும் மயிலாடுதுறை யென்றும் வழங்கப்படுகிறது.

## நாதசன்மா அனவித்தை முத்திபெற்ற வரலாறு.

நாதசன்மா என்ற அந்தணரும் அவர் தம் மனைவியாராகிய அனவித்தை என்பவரும் திருநீறு கண்டிகை தரித்தல் அஞ்செழுத்து ஓதுதல் ஆகிய நற்செயல்கள் புரிந்து அதன்பயனாக சிவபெருமானோடு ஒன்றி யிருப்பதாகிய சாலோக பதவியை அடைந்து கைலாயத்தில் வாழ்ந்து வந்தனர். அவ்வாறு இருக்கையில் அந்நிலையைக் காட்டிலும் உயர்நிலையாகிய சாயுச்சிய நிலை அடையக்கருதிய அவ்விருவர்களும் சிவபிரானை வணங்கி "பெருமானே அடியேங்கட்குச் சாயுச்சிய பதவியை அடையுமாறு அருள்புரிய வேண்டுமென்று" வேண்டிக்கொண்டனர். அதற்குப் பெருமான் 'நீவிர் தென்திசை நோக்கிச்சென்று

நமது தலங்களை வழிபடுக' என்று கட்டளையிட அவ்வாறே அவர்கள் தென்றிசை நோக்கிவந்து திருமுதுகுன்றம் (விருத்தாசலம்) முதலான தலங்கட்குச் சென்று ஆங்காங்குள்ள கடவுளர்களை வழிபட்டு இறுதியாகத் திருவையாற்றிற்கு வந்து சேர்ந்து அப்பெருமானை நாடோறும் முறைப்படி வழிபட்டு வருங்காலத்தில் ஒருநாள் ஐயாறப்பர் அவ்விருவருக்கும் எதிரேதோன்றி, 'அன்பர்களே! உங்கள் விருப்பம் யாதென' வினவியருள, அதற்குப் 'பெருமானே! யாங்கள் கங்கையினும் சிறந்த ஒரு புண்ணிய தீர்த்தத்தில் மூழ்கி சிவஞானம் பெற்றுச் சிவலிங்கத் தாபனஞ்செய்து வழிபட்டுத் தேவரீரோடு ஒன்றறக் கலத்தலாகிய சாயுச்சிய நிலையை அடையுமாறு கருணைபுரிய வேண்டும். இதுவே எங்களது விருப்பம்' என்று உரைப்ப அதுகேட்ட ஐயாற்றுப் பெருமான் "அன்பர்களே! உங்கள் விருப்பத்தை முடித்துவைப்பதற்கு ஏற்றதகுதியும்பெருமையும் பெற்ற தலம் மாயூரமென்ற தலமேயாகும். நாமே உம்மை அங்கு அழைத்துச் செல்கின்றோம். நீர் நம்முடன் வருக" என்று திருவாய் மலர்ந்தருளினர். பின்பு ஐயாறப்பரும் தேவியாருடன் புறப்பட அவர்களும் உடன் வந்தனர். அங்ஙனம் வந்த ஐயாறப்பர் மாயூரத்தின் சிறிது மேற்கே எழுந்தருளியிருந்து அன்பர்களை நோக்கி 'நீங்கள் சென்று இடப தீர்த்தமாகிய காவிரியில் மூழ்கி தான்றோன்றீசம் முதலான எழு தலங்களிலும் எழுந்தருளியிருக்கின்ற மாயூரநாதரை வழிபட்டு உத்தர மாயூரத்தில் (வள்ளலார் கோயிலில்) சிவஞானம்பெற்று மாயூரத்தில் சிவலிங்க உருக்களை நிறுவி நீவீர் உமது விருப்பத்தை நிறைவேற்றிக்கொள்க' என்று கட்டளையிட்டருளினர். அவ்வாறே எல்லாவற்றையும் அவர்கள் நிறைவேற்றிக்கொண்டு மாயூரநாதரை வழிபட நெருங்கிய பொழுது அப்பெருமான் அவர்களைநோக்கி, 'அன்ப! நீ நமது இடப்பக்கத்தில் நமது உருவத்தை அமைத்து வழிபட்டு வருக உனது மனைவி அனவித்தை நமது அஞ்சலை நாயகியின் வலப்பக்கத்தில் சிவலிங்க உருச்சமைத்து வழிபடுக. பின் உமது எண்ணத்தை நிறைவேற்றுகின்றோம்' என்று மொழிந்தருளினர். அப்பொழுது அவர்கள் பெருமானை வணங்கி எங்களால் அமைக்கப்படும் இவ்வுருவங்களையும் அன்பர்கள் வணங்கிச் செல்லுமாறு அருள்புரிய வேண்டுமென்று வேண்டிக்கொண்டனர். பரங்கருணைத் தடங்கடலாகிய ஸ்ரீ மாயூரநாதப் பெருமான் நம்மையும், நமது அஞ்சலை நாயகியாரையும் வணங்கிச்

செல்லும் அன்பர்கள் இறுதியாக உங்களிருவராலும் அமைக்கப்படும் உருவங்களை வணங்கிச் சென்றாலொழிய எங்களை வணங்குவதால் ஏற்படும் பயனை அடையமாட்டார்களாக என்ற பெரும் வரத்தைத் தந்தருளினர், தந்தருளி சிலநாட் சென்ற பின்னர் அவ்விருவர்களையும் அவரவர்களால் பூசிக்கப்பட்ட அவ்வுருவங்களினுள்ளேயே ஒன்றறக்கலக்கும்படி (ஐக்கியமாகும்படி) மாயூரநாதர் அருள்புரிந்தார்.

அன்றுமுதல் இத்தலத்துப் பெருமானையும் தேவியாரையும் வழிபடும் அன்பர்கள் இறுதியாக அனவித்தையீசுவரர் என்ற இறைவி விமானத்தின் வலப்பக்கத்திலுள்ள உருவத்தையும், இவ்வாலயத்துக் களஞ்சிய வாயிலில் உள்ள நாதசன்மா என்ற உருவத்தையும் வணங்கிச் செல்வது வழக்கமாக இருந்து வருகிறது. மேலும் அனவித்தை யீசுவரர் என்ற உருவம் அனவித்தையம்மையாரின் ஐக்கிய அடையாளம் என்பதை விளக்கும்பொருட்டு அவ்வுருவத்திற்கு இன்றும் புடவைப் பரிவட்டமே சாத்தப்பட்டு வருகிறது. ஐயாற்றுப் பெருமான் இத்தலத்தின் மேலவீதியின் மேல்பக்கத்தில் கோயில் கொண்டுள்ளார்.

## தீர்த்தங்கள்.

(1) இடப தீர்த்தம்:—இவ்வூரில் ஓடுகின்ற காவிரியாறே இத்தலத்திற்கு மிகமிகப் பெருமைவாய்ந்த தீர்த்தமாக அமைந்திருக்கிறது. இதற்கு இடப தீர்த்தம் என்று பெயர். இத்தீர்த்தம் தென்னிந்தியாவிற்கே பெரியதொரு சிறப்புடையதாக விளங்குகிறது. இத்தீர்த்தத்தில் ஐப்பசி மாதம் முதல் நாள் தொடங்கிக் கார்த்திகை மாதம் முதல்நாள் முடிய நீராடுதல் மிகப் புண்ணியந் தருவதென்பது நாடறிந்த செய்தியாகும். (2) பிரம தீர்த்தம்:—இது இவ்வாலயத்தில் அமைந்துள்ள திருக்குளமாகும், இத்தீர்த்தத்தில்தான் மயிலுருவமாகிய அம்மையார் படிந்து கடவுளைப் பூசித்து சுய உருவம் பெற்றார். (3) அனவித்திபாஸரஸ்:-இத்தீர்த்தம் இவ்வூர்க் கீழவீதியில் உள்ளது. தற்போது இது ஐய்யன் குளம் என்றும் தோடிக்குளமென்றும் அழைக்கப்படுகிறது. (4) அகத்திய தீர்த்தம்:—இது உட்கோவில் தக்ஷிணமூர்த்தியின் சன்னிதிக்குக் கீழ்பால் சதுரக்கிணறாக உள்ளது.

தலப்பெருமை:—இத்தலத்திற்கு எழுந்தருளிய திருஞான சம்பந்த மூர்த்தி சுவாமிகளைக் காவிரி வெள்ளத்தை வடியச் செய்து அவரை இங்கே வரவிடுத்தமையின் இவ்வூரின் கிழக்கே யுள்ள திருவிளநகரில் துறைகாட்டும் வள்ளல் எனவும், வாக்கை விரும்பிய பிரகஸ்பதிக்கு அதனை அருளிச் செய்தமை யின் இதன் தெற்கேயுள்ள பெருஞ்சேரியின் வாக்குக் காட்டும் வள்ளல் எனவும், வழிதெரியாமல் பயங்கிய தேவர்களுக்கு வழிகாட்டி யருளினமையின் மேற்கேயுள்ள மூவலூரில் வழி காட்டும் வள்ளல் எனவும், சிவஞானத்தை விரும்பிய இடப தேவர்க்கும் மற்றையோர்க்கும் சிவஞானத்தை அருளிச் செய்த காரணத்தால் வள்ளலார் கோயிலில் கைகாட்டும் வள் ளல் எனவும், திருநாமங்களைக்கொண்டு மாயூரநாதர் விளங்குக் கிறார்.

ஸ்ரீ மாயூரநாதப் பெருமானை இந்திரன் முதல் எண் திசைக் காவலர்களும் பல முனிவர்களும் வழிபட்டுத் தத்தம் பெயரால் நிறுவிய சிவக்குறிகளும் (இலிங்கம்) தீர்த்தங்களும் இத் தலத்தைச்சூழ பல உள்ளன. மேற்கூறிய தேவர் முனிவ யோர்களையன்றி கழுகு, கிளி, குதிரை, நரி, பூனை, யானை, வானு ரம், முதலிய அஃறிணை உயிர்களும் இப்பெருமானை வழிபட்டுப் பேறுபெற்றனவென்று இத்தலபுராணங்கள் தெரிவிக்கின்றன.

தலவிருட்சம்;—இங்குள்ள தலமரம் மா. இத்தலத்திற்கு மரம் மாமரமானமையால் இவ்வூர், சூதவனமென்று வடமொழி யில் அழைக்கப்படுகிறது.

கூத்து:—உமாதேவியாராகிய பெண்மயிலுடன் மாயூர நாதர் ஆண் மயிலுருக்கொண்டு ஒரு கூத்து இயற்றினர். இக் கூத்திற்குக் கௌரி தாண்டவமென்று பெயர்.

சபை:—ஸ்ரீ மாயூரநாதர் திருமால், பிரமன் முதலானவர்களை ஒரு சபையாகக் கூட்டி இத்தலத்துள் சுய உருவம்பெற்ற தேவியாரை மணந்துகொண்டார். இதன்பொருட்டு அவர் களை இத்தலத்தில் கூட்டிய கூட்டத்திற்கு ஆதி சபையென்று பெயர்.

திருவிழாக்கள்.—இவ்வாலயத்தில் நடைபெறுகின்ற வசந் தோர்ச்சவமே பிரம்மோர்ச்சவம்.

ஐப்பசி:—இம்மாதம் முழுவதுமே இக்கோயிலில் திருவிழா நடைபெறுகிறது. ஐப்பசி முதல் நாளன்று ஐம்பெரும் மூர்த்திகளும் மிக அலங்கார ஆரவாரங்களுடன் காவிரிக்கு எழுந்தருளித் தீர்த்தம் கொடுத்தருளுவர். ஐப்பசி மாதத்தில் மிகச் சிறப்புடையதாகக் கொண்டாடப்படுகிற மூன்றுநாட்களில் இம்முதல் நாளும் ஒன்றாகும்.

ஐப்பசி அமாவாசை:—அமாவாசை யன்றும் மேற்கூறிய வாறே இடப தீர்த்தத்தில் தீர்த்தம் நடைபெறும். இன்றைய தீர்த்தத்திற்கு தனிப்பட்டதொரு பெருமையுண்டு. முன்னொரு காலத்தில் மூலகாரணங்களால் கர்வங்கொண்ட நந்திதேவர், சிவபெருமானால் பாதாளத்தில் அழுத்தப்பட்டார், (அவர் அழுந்திய இடம் இத்தலத்திலுள்ள காவிரியின் துலாக் கட்டமாகும். அதின் நடுவில் இன்றும் அப்பெருமானின் திருவுருவம் காணப்படுகின்றது. இதனாலேயே இத்தீர்த்தம் இடபதீர்த்தம் என்று வழங்கப்படுகின்றது.) அப்பொழுது பெருமானைநோக்கி தங்கள் பெருமையை உள்ளவாறறிதற்குத் துணையாயுள்ள சிவஞானத்தை அடியேனுக்கு உரைத்தருள வேண்டுமென்று கேட்டுக்கொள்ள ஐப்பசி அமாவாசையன்று காவிரியின் வடபாகத்தில் தோன்றி இடபதேவருக்கு சிவஞானத்தை மொழிந்தருளினர். இத்தலம் வள்ளலார் கோயில். இங்கு உறையும் பெருமான் கைகாட்டும் வள்ளல் என்பதும்; கங்கை, யமுனை முதலான புண்ணியநதிகள் தங்களிடத்துப் படிவர்களுடைய பாபங்களை போக்கிக்கொள்ளும் பொருட்டு இவ்விடப தீர்த்தத்திற்கு மேற்கூறிய அமாவாசையன்று வந்து சேருகின்றன, என்பதும் புராணம் சொல்லுகின்ற வரலாறாகும். இவ்வரலாறுகளால் அதன்பெருமை நன்கு விளங்கும். இந்த அமாவாசை யன்று நடுப்பகல் இடபத்துறையில் காவிரி நீரை ஒரு பாத்திரத்தில் எடுத்து வைத்திருப்பின் எத்தனை யாண்டுகள் செல்லினும் அந்நீர் கெடுவதில்லை என்று சொல்லுவதும் அவ்வாறு செய்வதும் இன்றும் வழக்கில் உள்ளது.

கடைமுழுக்கு:—இது ஒவ்வொரு ஐப்பசித்திங்களும் அதன் கடைநாளன்று நடைபெறும். இத்தீர்த்தவிழாவை அறியாத இந்தியர் ஒருவரும் இருக்க முடியாது. காசிமுதல் கன்னியாகுமரிவரை உள்ள மக்களில் பலர் இம்முழுக்கு விழாவிற்கு வந்து நீராடிச்செல்வர். வட இந்தியாவில் கும்ப மேளாவைப்

போலவும் கும்பகோணம் மகாமக தீர்த்தம்போலவும் இவ்விழா விளக்கம் பெற்றிருக்கிறது. இவ்விழா மனங்கவரும் மாண்பு படைத்தது. இந்நாள் ஐப்பசி மாதமாகையால் இவ்விழாக் காலத்து மழை காணப்படுவது இயற்கை. விடாது மழை பெய்யினும் இவ்விழாவன்று ஐம்பெரும் கடவுளர்கள் மிக்க ஆரவாரத்துடன் எழுந்தருளிவரும் அழகையும் மக்கள் காவிரி நீரில் படிவதுடன் கடவுளன்பென்னும் கடலினும் படிந்தாடுதலும் காட்சியையும் காணும்பொழுது கடவுள் உணர்ச்சியை மற்றெந்த உணர்ச்சிகளும் தடைப்படுத்தும் வன்மையைப் பெற்றிருக்கவில்லை யென்பது தெள்ளத் தெளியப் புலனாகும். மற்றும் வள்ளலார் விசுவநாதர் ஐய்யாறப்பர் என்ற கடவுளர் களும் அன்று எழுந்தருளித் தீர்த்தம் கொடுத்தருளுவார்கள்.

முடவன் முழுக்கு:—இது கார்த்திகை மாதம் முதல்நாள் அன்று நடைபெறுகிறது. கடைமுழுக்கு முழுகிய மக்கள் அன்று முழுகாமல் செல்வதில்லை. அவ்வாறு சென்றால் கடை முழுக்கினாலும் மற்றைய முழுக்குகளினாலும் பயனில்லையென்று சொல்லப்படுகிறது. ஏதோ ஓர் முடவன் கடைமுழுக்கு விழா வில் மூழ்க எண்ணி விரைந்து நகர்ந்து வந்தும் அவ்விழாநாள் கடந்துவிட்டது. இதனால் அவன் புண்பட்ட நெஞ்சோடு மாயூரநாதரிடம் முறையிட நீ சென்று மூழ்கினால் பேறடை வாய் என்று அப்பெருமான் கூறியதாகவும் அவனும் அவ் வாறே மூழ்கி முக்தி அடைந்தானென்றும் ஒரு கர்ண பரம்ப ரைக் கதை கூறப்படுகிறது.

மயிலம்மன் பூசை:—மேற்கூறிய ஐப்பசி விழா மேற்படி மாதம் 21-ம் தேதியன்று பெரிய கொடி ஏற்றித் தொடங்கப் பெறும். இவ்விழாவின் 5-ம் நாளன்று மயிலுருவம் வாய்ந்த அம்மையார் இறைவனைப் பூசிக்கும் ஐதிகம் நடைபெறுகிறது இவ்விழா இங்குச் சிறப்புரிமை பெற்றிருக்கிறது. மாலை 3 மணிக்கு மயிலம்மை எழுந்தருளி காவிரியாடி மாயூரநாதர் கோவிலில் அமைக்கப்பெற்றுள்ள பல்வேறு பந்தல்கள் தோறும் உலாவந்து மாலை சுமார் 6½ மணிக்கு இறைவன் சந் நிதியில் மாயூரநாதரைப் பூசைசெய்வது வழக்கம். இவ்விழா வைக்காண கோயில் கொள்ளாத அளவில் மக்கள் குழுமி யிருப்பார்கள். அன்று மயிலம்மை தாண்டவம் ஆடும் காட்சி மக்கள் உளத்திற்கும் உடற்கும் பெரியதொரு சிலிர்ப்பைத் தருவதாகும்.

திருக்கல்யாணம்.—இவ்விழாவின் ஏழாம்நாளன்று திருக்கல்யாணம் நடைபெற்று வருகிறது. மற்றும் மார்கழித் தரிசனம், தைப்பூசம், சிவன்ராத்திரி, ஆனித் திருமஞ்சனம், ஆடிப்பூரம், ஆவணிமூலம் நவராத்திரி, கார்த்திகைத் திருநாள் முதலிய விழாக்கள் அவ்வக்காலங்களில் நடைபெற்று வருகின்றன

சுற்றாலயங்கள்.—பஞ்ச விசுவநாதர்கள்:—இத்தலத்தில் பல்வேறு இடங்களில் விசுவநாதர் என்ற திருநாமங்கொண்ட கடவுளர்களின் கோயில்கள் காணப்படுகின்றன.

(1) நடைத்தெரு விசுவநாதர் கோயில். இது துலாக் கட்டத்தின் தென்பால் கிழக்குமுகமாயுள்ளது.

(2) பாலக்கரை விசுவநாதர்கோயில்:—இது காவிரிப்பாலத்தின் தென்கரையில் உள்ளது.

(3) காவிரி நதியின் வடகரையில் வள்ளலார் தீர்த்த மண்டபத்தின் கீழ்ப்பகுதியில் மற்றும் ஒரு விசுவநாதர் கோயில் காணப்படுகிறது.

(4) திம்மப்பய நாயக்கன் படித்துறையில் உள்ளது.

(5) மாயூரம் வடக்கு வீதிக்கும் கோயிலின் வடக்குத் திருமதிலுக்கும் இடையில் உள்ளது.

இவ்வைந்து கோயில்களையும் கண்ணுவர், கௌதமர், அகத்தியர், பரத்வாசர், இந்திரன் என்னும் ஐவரும் நிர்மாணித்துப் பூசைபுரிந்தனர் என்று சொல்லப்படுகிறது.

இத்தலங்களை இவர்கள் நிர்மாணிப்பதற்கு ஒரு காரணம் கீழ்வருமாறு கூறப்படுகிறது. மேற்சொன்ன முனிவர் ஐவரும் கங்கை, யமுனை முதலிய புண்ணிய தீர்த்தங்களில் படியச் செல்லுகையில் அந்நதித் தெய்வங்கள் தங்கட்கு எதிரே அழகற்ற உருவங்கள் தாங்கிவர முனிவர்கள் ஒதுங்கிச்சென்று பிறகு ஞானநோக்கால் அறிந்து நீங்கள் எங்குச் செல்கின்றீர்கள் என்று வினவ எங்கள்பாவங்களைக்கழுவும்பொருட்டு மாயூரத்தலத்தின்கண் உள்ள இடப தீர்த்தத்தை நோக்கிச் செல்கின்றோம் என உரைப்ப முனிவர்களும் அந்நதித் தெய்வங்களோடு இத்தலத்திற்கு வந்து இம்மூர்த்திகளை நிறுவிப் பூசித்தனர் என்பது.

ஐய்யாறப்பர்:—இத்திருக்கோயிலைச் சேர்ந்த மேலவீதியின் மேற்கில் அரைபர்லாங்கு தூரத்தில் ஐய்யாறப்பர் கோயில் காணப்படுகிறது. இவ்வாலயத்துப் பெருமானே நாதசன்மா என்ற முனிவரை இங்கு அழைத்துக் கொண்டுவந்து முக்தி பெறுமாறு செய்தனர். என்பது முன்னும் சொல்லப்பட்டுள்ளது, இன்றும் இவ்வாலயத்தின் நித்திய நைமித்திய விழாக்களெல்லாம் மாயூரநாதர் கோயிலின் ஆதரவிலேயே நடந்து வருகின்றன.

ஏழு மாதர்கள் கோயில்:—ஏழு மாதர்களும் வரிசையாக அமைக்கப்பட்டுள்ள கோயில் இத்தலத்தின் வடக்கு வீதியின் நகராண்மைக்கழக அலுவலகத்திற்கு எதிரில் உள்ளது.

மாரியம்மன் கோயில்.—இத்தலத்திலிருந்து தரங்கம்பாடிக்குச் செல்லுங் கற்சாலையின் வடபாகத்தில் இரண்டு கோயில்கள் சின்ன மாரியம்மன், பெரிய மாரியம்மன் என்று பெயர்களுடன் விளங்குகின்றன.

ஐயனர் கோயில்:—இக்கோயில் மாயூரநாதர் கோயிலுக்கு நேர் தென்பாகத்தில் ஒன்றரை பர்லாங்கு தூரத்திலிருக்கிறது. மேற்கூறிய கோயில்கள் யாவும் மாயூரநாதரின் கோயில் பராமரிப்புக் குட்பட்டதாக இருந்து வருகின்றன.

### ஏழு மாதர்களால் அமைக்கப்பட்ட மூர்த்திகள்.

(1) தான்தோன்றீசம் (இது சுயம்புநாதர் கோயிலென்று அழைக்கப்படுகிறது)இது மாயூரத்திற்கும் பல்லவராயப்பட்டிற்கும் இடையே கற்சாலையில் உள்ளது.

(2) கருணாபேட்டை (கருங்குயில் நாதன்பேட்டை)

(3) கஞ்சாறு (இது ஆனதாண்டவபுரம்)

(4) பசுபதீசுவரம் (இது வள்ளலார் கோயிலுக்கும் தருமபுரத்திற்கும் இடையில் உள்ளது)

(5) கழுக்காணிமுட்டம்

(6) தருமபுரம்

(7) வள்ளலார் கோயில் ஆகிய இவ்வேழு கோயில்களும் இத்தலத்தைச்சுற்றியிருக்கின்றன.

நிர்வாகம்:—(1) வரவு செலவு. இக்கோயிலுக்கு ருபதாக சுமார் 915 ஏக்கர் நன்செய் நிலங்களும் சுமார் 512 ஏக்கர் புன்செய் நிலங்களும் உள்ளன. இவற்றையன்றி பல வீடுகளும் மனைக்கட்டுகளும் உள்ளன. இக்கோயிலுக்கு ஆண்டு ஒன்றுக்கு வருமானம் சுமார் ரூ 30000. ஆண்டின் மொத்தச்செலவும் ரூ. 31000 ஆகிறது: இதில் சர்க்கார் கிஸ்தி மாத்திரம் சுமார் ரூ. 8000.

(2) நகைகள்:—இங்கு சுமார் ரூ. 20000 மதிப்பிடக்கூடிய திருவாபரணங்கள் உள்ளன.

3. கட்டளைகள்:-உச்சிகாலக் கட்டளை பிச்சைக்கட்டளை அர்த்தசாமக் கட்டளை அடைக்காமக்கட்டளை காலசந்திக் கட்டளை முதலான கட்டளைகள் நடந்து வருகின்றன. இவ்வாலயத்திலுள்ள குமாரக்கடவுளுக்கு தருமபுரம் ஆதீனத்திலிருந்து கட்டளை நடந்து வருகிறது இத்தலம் சில ஆண்டுகட்குமுன் கீழக்கஞ்சைஜில்லாக் கோர்ட்டிலும் சென்னை உயர்முறை மன்றத்திலும் நடந்த ஸ்கீம் வழக்கின்முடிவுப்படி சென்னை எண்டௌமென்ட்போர்டாரின் மேற்பார்வையிலிருந்து வருகிறது இந்த ஸ்கீம்திட்டம் 1-7-1941 முதல் நடைமுறையிலிருந்து வருகிறது. இத்திட்டத்தின் படி திருவாவடுதுறை ஆதீனத் தலைவர்கள் ஏகபோக பரம்பரை உரிமை வாய்ந்த டிரஸ்டி ஆவார்கள். மற்றும் இக்கோயிலைப் பெருஞ்செலவில் திருப்பணி செய்துள்ள திருவாளர் வீரப்பச் செட்டியாரின் பிள்ளையாகிய ஜமீன் பெத்தபெருமாள் செட்டியார் அவர்களின் குடும்பத்திலுள்ள தலைவர்களையும் மற்றும் இரு உறுப்பினர்களையும் கொண்டுள்ள கமிட்டி யொன்று அமைக்கப்பட்டுள்ளது கமிட்டி சூபர்வைசிங் கமிட்டி என்று அழைக்கப்படும் இக்கமிட்டிக்கு மேற்குறித்த, திரு பெத்த பெருமாள் செட்டியாரின் குடும்பத்திலுள்ளவர்கள் தலைவராவர் இந்த பரம்பரை டிரஸ்டியின் கீழும் கமிட்டியாரின் மேற்பார்வையிலும் இருந்து தேவஸ்தானத்தின் பல்வேறு அலுவல்களையும் பார்த்து நடத்திவர ஒரு மேற்பார்வையாளர் நியமிக்கப்பட்டுள்ளார். தற்போது இப்பதவியில் திரு R. K. சுப்பிரமணிய பிள்ளையவர்களிருந்து மிகவும் சீரியமுறையில் நிர்வாகப் புரிந்து வருகின்றார்கள்.

**திருப்பணிகள்:**—இங்குள்ள மாயூரநாதர் அஞ்சலை நாயகியார் இருவர் கோயில்களும் கருங்கல் திருப்பணி. இத்திருப்பணியை நாட்டுக்கோட்டை நகரத்தார் வழியிற் பிறந்த தேவக்கோட்டை இரட்டையம்பாடி ஜமீன்தார் ஸ்ரீமான் அள. வீ. பெ. வீரப்பச் செட்டியார் செய்துள்ளார் இவர்கள் இப்பணிக்குச் செலவு செய்த தொகை 22-லக்ஷம் ஆகும். இவர்களின் குடும்பத்தினர் தற்பொழுது இக்கோயிலின்சூபர்வைசிங் கமிட்டித் தலைவராய் இருந்து வருகிறார்கள். வீரப்பச் செட்டியார் அவர்களால் அம்பாள்கோயில் திருப்பணி முழுதும் முடிக்கப்பட்டு 1911-ம் ஞு சித்திரை மீ 27உ கும்பாபிஷேகம் நடத்தி வைக்கப்பட்டது. சுவாமி கோயிலில் கர்ப்பக்கிரஹம் அர்த்த மண்டபம் மஹாமண்டபம் சேர்ந்த முதற் பிரகாரம் முடிய திருப்பணி செய்யப்பட்டு 1923-ஞு ஆவணி மீ 13உ கும்பாபிஷேகம் நடந்தேறியது. இத்திருப்பணியைப் பெருஞ்செலவில் செய்துள்ள வீரப்பச் செட்டியார் அவர்களின் உருவச்சிலையும், மற்றும் அவரது மனைவியார், அவரது தந்தையார், இத்திருப்பணி காலத்து வாழ்ந்த ஆதீனத்தலைவர் ஸ்ரீ ல ஸ்ரீ அம்பலவாண தேசிகர், ஆகியோர்களின் உருவச்சிலைகளும் இறைவி கோயிற் றூண்களில் காணப்படுகின்றன. இறைவன் சந்நிதானத்தில் வீரப்பச் செட்டியாரவர்களின், மகன் வெங்கடாசலஞ் செட்டியார் உருவச்சிலையும் சுவாமி கோயில் திருப்பணி முடிவுற்ற காலத்து வாழ்ந்த ஆதீனத் தலைவராகிய ஸ்ரீ ல ஸ்ரீ வைத்திலிங்க தேசிகரவர்களின் உருவச்சிலையும் காணப்படுகின்றன. உட்கோயில் அளவில் அழகாகச் செய்யப்பட்டிருக்கின்றது.

**பிற்குறிப்புகள்:**—பண்டைக்காலத்து இரண்டு பங்காளிகளாக விருந்து வாழ்ந்துவந்த இலைவணிகர் என்ற செட்டி மக்கட்கு இவ்வாலயம் உரித்தாயிருந்ததென்றும் பங்காளிகளுக்குள் சச்சரவு ஏற்பட்டு இருவருமே கோயில் வேண்டாம் என்று தீர்மானித்து அவர்களின் குருவும் இவ்வூரில் வாழ்ந்து வந்தவருமாகிய தேசிகர் ஒருவரிடம் ஒப்படைக்க சிலகாலம் அவர் மேல் பார்வையிலிருந்து வந்தது. பிறகு அத்தேசிகர் தன் பிள்ளைகளிருவருக்கும் பங்குசெய்து எழுதிவைத்து இறந்துவிட மூத்த பிள்ளையினால் அபிஷேகக் கட்டளை திருவாவடுதுறை ஆதீனத்தாரவர்களிடம் விலைக்கு கொடுக்கப்பட்டதென்றும் இளைய பிள்ளையினால் குமாரக் கட்டளை, தருமபுர ஆதீனத்தாரவர்களிடம் விலைக்கு கொடுக்கப்பட்டதென்றும் சொல்லப்படுகிறது.

சில ஆண்டுகட்கு முன்னர் திருப்பாதிரிப்புலியூர் சீகாழி வைத்தீஸ்வரன் கோயில் முதலான தலங்களில் தேர் முதலியவற்றை கொளுத்தியும் அவ்வாலயங்களுட்புகுந்து களவாடியும் கோயில்களில் பல தூய்மையற்ற காரியங்களைச் செய்தும் வந்த சில நாத்திக கொடியவர்களுக்குள் ஒருவன் இவ்வூர் ஆலயத்துள் புகுந்து அபையாம்பிகை அம்மையாரின் திருவாபரணங்களைக் கழற்ற முற்படும் பொழுது தன் இரண்டு கைகளும் நின்ற நிலையில் அவ்வாறே நின்றும், இரண்டு கண்ணும் ஒன்றும் புலப்படாதும் கோயிலுக்குள்ளேயே ஒரு மூலையில் நின்று கொண்டிருக்க மறுநாட் காலையில் கோயில் திறப்பு நிகழ்த்தியபோது கண்டு பிடிக்கப்பட்டான் அவனைப்பற்றி கொண்டுவந்து போலிஸ் அதிகாரிகளும் மாஜிஸ்டிரேட்டும் விசாரணை செய்த பொழுது அவன் இத்தெய்வங்கட்கு உண்மையான சக்தி இருக்கின்றதா என்பதை ஆராயவே இவ்வாறு செய்து கொண்டு வருகிறேன் பலவூர்களில் இத்தகைய காரியத்தைச் செய்திருப்பினும் இவ்வூர் அம்பிகைதான் சக்தியுடையவள் என்பதை நான் உணரும்படிச் செய்தாளென்றும் இங்குதான் எனக்குப் பெரியதொரு அச்சம் ஏற்பட்டதென்றும் சொன்னான் என்றும் வரலாறு சொல்லப்படுகிறது. இச்செய்தி 1922-ம் வருடத்தில் நடந்ததாகும் இவ்வூர் சப்மாஜிஸ்டிரேட் கோர்ட்டில் இவ்வழக்கு விசாரிக்கப்பட்டு தீர்ப்பு எழுதப்பட்டிருக்கிறது இந்த குற்றவாளி தன்கை விரல்களைத் தானே நறுக்கிவிடும்படிக் கேட்டுக்கொண்டான் என்றும் சொல்லப்படுகிறது சற்றேறக்குறைய 150 ஆண்டுகட்கு முன் இவ்வூரைச்சேர்ந்த நல்லத்துக்குடியில் ஐயாவையர் என்ற கிருஷ்ணய்யர் வாழ்ந்து வந்தார் அவரை இத்தலத்து இறைவி அஞ்சலை நாயகியார் ஐந்தாண்டுக் குழந்தையாய் இருக்கும் பொழுது தொடங்கியே ஆட்கொள்ளக்கருதி தாய்போல் வந்து கிண்ணத்திற் பால்கொடுத்தும், தனது ஆலயத்துள் அழைத்துச் சென்று கோயிலைச் சுற்றிக் காட்டியும் மறைந்தருளினர் அன்று முதல் ஐயருக்கு ஞானம் வளர வயதும் ஏறியது பின் ஒருநாள் நம்மை தமிழாற் பாடுக. என்று அம்மையார் உத்திரவிட அபயாம்பிகை சதகம் என்ற நூலைப்பாடினர். இக்காலத்து இவர் இவ்வூரில் பெயர் பெற்ற பாளையப் பட்டாராகிய பெரிய வகுப்பில் கணக்கு வேலை பார்த்து வந்தார் இவர் மீது பல குற்றச்சாட்டுகள், தஞ்சை அரசர் சரபோஜி மன்னரிடம் செல்ல, இவரை சோதிக்க எண்ணி அம்மன்னன் இங்குவர அவ

ருக்கு அபையாம்பிகை, தனக்குக் காட்சியளிக்கும் முறையை தம்பிக்குநல்லான் பட்டினமென்ற சிற்றூரில் விசாலாட்சி அம்மன் சந்நிதியில் காட்டினர். அன்று முதல் இவர் பெருமை இன்றும் பரவியது. அபையாம்பிகையின் அருளைப் பெருகி வளர்ந்து முடிவில் ஒருநாள் அர்த்தயாமத்தில் விபூதி பெற்று அபையாம்பிகை கோயிலுட்சென்றவர் திரும்பி வரவில்லை. பின்னர்க் காணக்கிடைக்கவுமில்லை என்ற இக்கர்ணபரம்பரை வரலாறு ஒன்று கேட்கப்படுகிறது.

கழைக்கூத்து:-இவ்வூர்க் கோபுரத்தில் சுமார் 75 ஆண்டுகட்கு முன்னர்க் காஞ்சிபுரத்தினின்றும் வந்த கழைக்கூத்தாடிகளிற் சிலர் சில குறிப்பிட்ட நாட்களில் கம்பங்கட்டிக் கூத்தாடுவதும் ஒரு குழந்தையை அக்கம்பத்தில் வைத்து விடுதலாகிய மாத்திரக்கோல் தட்டுதலும் நிகழ்ந்தன என்று முதியவர்களிற் சிலர் சொல்லுகின்றனர் இதுபோன்று திருநாகேச்சுவரம் கோயில் கோபுரத்திலும் ஆடுவதுண்டு என்று சொல்லப்படுகிறது.

பாவை விளக்குகள்:—இங்குத் தேவியாரின் சந்நிதியில் வெண்கலத்தாற் செய்யப்பட்ட சில பாவைவிளக்குகள் உள்ளன. இவைகள் இவ்வூரில் பெருந்தரும சத்திரம் நிறுவியுள்ள அம்பாபாய் என்ற அத்தண வகுப்பைச்சேர்ந்த அம்மையாரால் செய்து வைக்கப்பட்டவை.

புலவர்கள்;—இவ்வூர்த் தலபுராணத்தை இயற்றி யருளிய வரும் திருவாவடுதுறை ஆதீன ஸ்ரீ வித்வானும், மகா உ. வே. சாமிநாதையர்முதலான பெருந்தமிழ்ப் புலவர்களுக்குப் பெருந்தலைப் பேராசிரியருமாகிய திரிசிரபுரம் மகாவித்வான் திருவாளர்மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் இவ்வூர்த் தெற்கு வீதியில் நீண்டகாலம் வாழ்ந்து வந்தார்கள்.

திருவாவடுதுறை யாதீனத்து மேலகரம் ஸ்ரீலஸ்ரீ சுப்பிரமணிய தேசிகர் அவர்களிடத்தும், மகாவித்வான் திரு மீனாட்சி சுந்தரம் பிள்ளை யவர்களிடத்தும் பெருமதிப்புக்காட்டிப் படித்தும் பழகியும் வந்த கிருஸ்தவ குலத்தவப் பிறவியாளரான ஜில்லா முன்சீப். திரு. வேதநாயகம் பிள்ளை யவர்கள் இவ்வூரில் வாழ்ந்தவராவார்கள்.

நந்தன் சரித்திரக் கீர்த்தனையைப் பாடியுள்ள ஸ்ரீ கோபால கிருஷ்ண பாரதியாரவர்கள் இவ்வூரில் வசித்து வந்தவராவார்.

உ

சிவமயம்

# திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரம்



பண். தக்கராகம்

திருச்சிற்றம்பலம்

கரவின் றிநன்மா மலர் கொண்டு
இரவும் பகலுந் தொழுவார்கள்
சிர மொன்றிய செஞ்சடை யார்வாழ்
வரமா மயி லாடு துறையே. (1)

உரவெங் கரியின் னுரிபோர்த்த
பரமன் னுறையும் பதியென்பர்
குரவஞ் சுரபுன் னையும் வன்னி
மருவும் மயிலா டுதுறையே. (2)

ஊனத் திருணீங் கிடவேண்டில்
ஞானப் பொருள்கொண் டடிபேணுந்
தேனைத் திரியச னமருஞ்சேர்
வானம் மயிலா டுதுறையே, (3)

அஞ்சொண் புலனும் மவைசெற்ற
மஞ்சன் மயிலா டுதுறையே
நெஞ்சொன் றிநினைந் தெழுவார்மேற்
றுஞ்சும் பிணியா யினதானே. (4)

கணியார் மதிசெஞ் சடையான்றன்
அணியார்ந் தவருக் கருளென்றும்
பிணியா யினதீர்த் தருள்செய்யும்
மணியான் மயிலா டுதுறையே. (5)

தொண்ட ரிசைபா டியுங்கூடிக்
கண்டு துதிசெய் பவனூராம்
பண்டும் பலவேதி யரோத
வண்டார் மயிலா டுதுறையே. (6)

அணங்கோ டொருபா கமமர்ந்து
இணங்கி யருள்செய் தவனாராம்
நுணங்கும் புரிநூ லர்கள்கூடி
வணங்கும் மயிலா டுதுறையே. (7)

சிரங்கை யினிலேந் தியிரந்த
பரங்கொள் பரமேட் டிவரையா
லரங்கவ் வரக்கன் வலிசெற்ற
வரங்கொண் மயிலா டுதுறையே. (8)

ஞாலந் தன்னை நுகர்ந் தவன் றானும்
கோலத் தயனும் மறியாத
சீலத் தவனூர் சிலர்கூடி
மாலைத் தீர்மயிலா டுதுறையே. (9)

நின்றுண் சமணும் நெடுந்தேரர்
ஒன்றும் மறியா மையுயர்ந்த
வென்றி யருளா ளவனூராம்
மன்றன் மயிலா டுதுறையே. (10)

நயர்கா ழியுண்ஞா னசம்பந்தன்
மயல்தீர் மயிலா டுதுறைமேல்
செயலா லுரைசெய் தனபத்தும்
உயர்வா மிவையுற் றுணர்வார்க்கே. (11)

திருச்சிற்றம்பலம்.



## திருஞானசம்பந்த சுவாமிகள் தேவாரம்

---

*பண்—சாதாரி*

திருச்சிற்றம்பலம்

ஏனவெயி றாடரவொ டென்புவரி
யாமையிவை பூண்டிளைஞராய்க்
கானவரி நீடுழுவை யதளுடைய
படர்சடையர் காணியெனலாம்
ஆனபுகழ் வேதியர்க ளாகுதியின்
மீதுபுகை போகியழகார்
வானமுறு சோலைமிசை மாசுபட
மூசுமயி லாடுதுறையே. (1)

அந்தண்மதி செஞ்சடைய ரங்கணெழில்
கொன்றையொ டணிந்தழகராம்
எந்தமடி கட்கினிய தானமது
வேண்டிலெழி லார்பதியதாம்
கந்தமலி சந்தினொடு காரகிலும்
வாரிவரு காவிரியுளால்
வந்ததிரை யுந்தியெதிர் மந்திமலர்
சிந்துமயி லாடுதுறையே. (2)

தோளின்மிசை வரியரவ நஞ்சழல
விக்குமிகு நோக்கரியராய்
மூளைபடு வெண்டலையி லுண்டுமுது
காடுறையு முதல்வரிடமாம்
பாளைபடு பைங்கமுகு செங்கனி
யுதிர்த்திட நிரந்து கமழ்பூ
வாளைகுதி கொள்ளமடல் விரியமணம்
நாறுமயி லாடுதுறையே. (3)

ஏதமில ரரியமறை மலையர்மக
ளாகியவி லங்கு நுதலொண்
பேதைதட மார்பதிட மாகவுறை
கின்றபெரு மானதிடமாம்
காதன்மிகு கவ்வையொடு மவ்வலவை
கூடிவரு காவிரியுளால்
மாதர்மறி திரைகள்புக வெறியவெறி
கமழுமயி லாடுதுறையே. (4)

பூவிரி கதுப்பின்மட மங்கையர
கந்தொறு நடந்துபலிதேர்
பாவிரி யிசைக்குரிய பாடல்பயி
லும்பரமர் பழமையெனலாம்
காவிரி நுரைத்திரு கரைக்குமணி
சிந்தவரி வண்டுகவர
மாவிரி மதுக்கிழிய மந்திகுதி
கொள்ளுமயி லாடுதுறையே. (5)

கடந்திகழ் கருங்களி றுரித்துமையு
மஞ்சமிக நோக்கரியராய்
விடந்திகழு மூவிலைநல் வேலுடைய
வேதியர் விரும்புமிடமாம்
தொடர்ந்தொளிர் கிடந்ததொரு சோதிமிகு
தொண்டையெழில் கொண்டதுவர்வாய்
மடந்தையர் குடைந்தபுனல் வாசமிக
நாறுமயி லாடுதுறையே. (6)

அவ்வதிசை யாருமடி யாருமுள
ராகவருள் செய்தவர்கண் மேல்
எவ்வமற வைகலுமி ரங்கியெரி
யாடுமெம தீசனிடமாம்
கவ்வையொடு காவிரிக லந்துவரு
தென்கரை நிரந்து கமழ்பூ
மவ்வலொடு மாதவிம யங்கிமணம்
நாறுமயி லாடுதுறையே. (7)

இலங்கை நகர் மன்னன்முடி யொருபதினொ
டிருபதுதோ ணெரிய விரலால்
விலங்கலி லடர்த்தருள் புரிந்தவ
ரிருந்தவிடம் வினவுதிர்களேல்
கலங்கலுரை யுந்தியெதிர் வந்தகய
மூழ்கி மலர் கொண்டு மகிழா
மலங்கிவரு காவிரிநி ரந்துபொழி
கின்றமயி லாடுதுறையே. (8)

ஒண்டிறலி னான்முகனு மாலுமிக
தேடியுணரா தவகையால்
அண்டமுற வங்கியுரு வாகிமிக
நீண்டவர னாரதிடமாம்
கொண்டையிரை கொண்டுகெளி றுருடனி
ருந்துகிளர் வாயறுதல்சேர்
வண்டன்மணல் கெண்டிமட நாரைவிளை
யாடுமயி லாடுதுறையே. (9)

மிண்டுதிற லமணரொடு சாக்கியரு
மலர்தூற்ற மிக்கதிறலோன்
இண்டைகுடி கொண்டசடை யெங்கள்பெரு
மானதிட மென்பரெழிலார்
தெண்டிரைப ரந்தொழுகு காவிரிய
தென்கரை நிரந்துகமழ்பூ
வண்டறைவ திளைக்கமது வந்தொழுகு
சோலைமயி லாடுதுறையே. (10)

நிணந்தருமெ யானைநில வானமதி
யாதவொரு நலமொடு பேய்க்
கணந்தொழுக பாலிகழ லேத்திமிக
வாய்த்ததொர காதன்மையினால்
மணந்தண்மலி காழிமறை ஞானசம்
பந்தன்மயி லாடுதுறையைப்
புணர்ந்ததமிழ் பத்துமிசை யாலுரைசெய்
வார்பெறுவர் பொன்னுலகமே. (11)

திருச்சிற்றம்பலம்.

௨

## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்

---

*திருக்குறுந்தொகை.*

திருச்சிற்றம்பலம்.

கொள்ளுங் காதன்மை பெய்துறுங் கோல்வளை
உள்ள முள்கி யுரைக்கும் திருப்பெயர்
வள்ளன்மாமயி லாடுதுறையுறை
வெள்ளந்தாங்கு சடையனை வேண்டியே. (1)

சித்தந்தேறுஞ் செறிவளை சிக்கெனும்
பச்சை திருமென் பைங்கொடி பான்மதி
வைத்தமாமயி லாடுதுறையரன்
கொத்தினிற்பொலி கொன்றை கொடுக்கிலே. (2)

அண்டர் வாழ்வும் அமரரிருக்கையும்
கண்டுவீற் றிருக்கும் கருத்தொன்றிலோம்
வண்டுசேர்மயி லாடுதுறையரன்
தொண்டர் பாதங்கள் சூடித்துதையிலே. (3)

வெஞ்சினக்கடுங் காலன் விரைகிலான்
அஞ்சிறப்பும் பிறப்பும் அறுக்கலாம்
மஞ்சன்மாமயி லாடுதுறையுறை
அஞ்சொலா ளுமைபங்கனருளிலே. (4)

குறைவிலோங் கொடுமாறுட வாழ்க்கையால்
கறைதிலாவிய கண்டனெண்டோளினன்
மறைவலான் மயிலாடுதுறையுறை
இறைவனின்கழ லேத்தியிருக்கிலே. (5)

நிலைமைசொல்லு நெஞ்சே தவமென்செய்தாய்
கலைகளாய வல்லான் கயிலாயநல்
மலையன் மாமயி லாடுதுறையனம்
தலையின்மேலு மனத்துளுந் தங்கவே. (6)

நீற்றினானிமிர் புன்சடையான்விடை
ஏற்றினானமை யாளுடையான்புலன்
மாற்றினான்மயி லாடுதுறையென்று
போற்றுவார்க்குமுண்டோ புவிவாழ்க்கையே. (7)

கோலும் புல்லு மொருகையிற் கூர்ச்சமும்
தோலும் பூண்டு துயரமுற்றென்பயன்
நீலமாமயி லாடுதுறையனே
நூலும் வேண்டுமோ நுண்ணுணர்ந்தோர்கட்கே. (8)

பணங்கொளா டரவல் குற்பகிரதி
மணங்கொளச்சடை வைத்த மறையவன்
வணங்குமாமயி லாடுதுறையரன்
அணங் கோர்பால்கொண் கோலமழகிதே. (9)

நீணிலாவர வச்சடை நேசனைப்
பேணிலாதவர் பேதுற வோட்டினேம்
வாணிலாமயிலாடு துறைதனைக்
காணிலார்க்குங் கடுந்துயரில்லையே. (10)

பருத்த தோளு முடியும் பொடிபட
இருத்தினனவ னின்னிசை கேட்டலும்
வருத்தினன்மயி லாடுதுறை தொழும்
கரத்தினர்வினை கட்டறுங்காண்மினே. (11)

திருச்சிற்றம்பலம்.



## திருநாவுக்கரசு சுவாமிகள் தேவாரம்



*அடைவு திருத்தாண்டகம்.*

கயிலாய மலையெடுத்தான் கரங்களோடு
சிரங்களுர நெரியக் கால்விரலாற் செற்றேன்
பயில்வாய பராய்த்துறை தென்பாலைத்துறை
பண்டெழுவர் தவத்துறைவெண்டுறை
பைம்பொழிலிற்
குயிலாலந்துறை சோற்றுந்துறை பூந்துறை
பெருந்துறையுங் குரங்காடு துறையினோடு
மயிலாடுதுறை கடம்பந்துறை யாவடு
துறை மற்றுந்துறையனைத்தும் வணங்குவோமே.

*திருநாவுக்கரசு சுவாமிகள் இத்தலத்தைப் பற்றி திருவீழிமிழலைத் தேவாரத்திலும் பாடியுள்ளார்.*

கயிலாய மலையுள்ளார் காரோணத்தார்
கந்தமாதனத்துளார் காளத்தியார்
மயிலாடுதுறையுளார் மாகாளத்தார்
வக்கரையார் சக்கரமாற் கீய்ந்தார் வாய்ந்த
அயில்வாய சூலமுங் கபாலமு
மமருந்திருக்கரத்தா ரானேறேறி
வெயிலாய சோதி விளங்குநிற்றூர்
வீழிமிழலையே மேவினரே.

*இத்தலத்தைப்பற்றி திருவெண்ணியூர்த் தேவாரத்திலும்திருநாவுக்கரசுசுவாமிகள்பாடியுள்ளார்*

சடையேறு புனல்வைத்த சதுரனாருந்
தக்கன்றன் பெருவேள்வி தடைசெய்தாரும்
உடையேறு புலியதண்மேல் நாகங்கட்டி
யுண்பலிக்கென் றூரூரின் உழிதர்வாரும்
மடையேறிக் கயல்பாய வயல்கள் சூழ்ந்த
மயிலாடுதுறையுறையு மணாளனாரும்
விடையேறு வெல்கொடியெம் விமலனாரும்
வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்தனாரே.

**திருச்சிற்றம்பலம்.**

## பெரிய புராணம்

### *திருஞானசம்பந்த சுவாமிகள் புராணம்.*

மூவலூருறை முதல்வரைப் பரவிய மொழியால்
மேவுகாதலி லேந்தியே விருப்பொடும் போந்து
பூவலம்புதண் புனற்பணைப் புகலியர் தலைவர்
வாவிசூழ் திருமயிலாடுதுறையினில் வந்தார்.

மல்குதண்டலை மயிலாடுதுறையினில் மருவும்
செல்வ வேதியர் தொண்டரோ டெதிர்கொளச்சென்று
கொல்லை மான்மறிக்கையரைக் கோயில்புக் கிறைஞ்சி
யெல்லை யில்லதோரின்ப முன்பெருகிடவெழுந்தார்.

### *திருநாவுக்கரசு சுவாமிகள் புராணம்.*

மேவுபுனற் பொன்னி யிருகரையுஞ் சார்ந்து
விடையுயர்த்தார் திருச்செம்பொன்பள்ளி பாடி
காவுயரு மயிலாடுதுறை நீள்பொன்னிக்கரைத்
துருத்தி வேள்விக்குடி யெதிர்கொள்பாடி
பாவுறு செந்தமிழ் மாலைபாடிப் போற்றிப் பரமர்
திருப்பதி பலவும் பணிந்து போந்தே
ஆவுறு மஞ்சாடுவார்கோடி காவிலணைந்து
பணிந் தாவடுதண்டுறையைச் சார்ந்தார்.

### *கந்த புராணம்.*

மண்ணியங்கரையிற் றென்பால் வகுத்தசேய்ஞலூர் நீங்கி
யெண்ணியேஉதவும் பொன்னியிகந்திடை மருதினேடு
தண்ணியன் மஞ்ஞையாடுந்தண்டுறை பரியனூருங்
கண்ணுதலிறைவன்றனமேனவுங் கண்டுபோனன்.



இத்தலத்துக்குச்சிதம்பரநாத முனிவரால் இயற்றப்பட்ட

## முருகன் பிள்ளைத் தமிழ்.



ஐந்தரு எனும் கற்பகச்சோலை வருக அறி
வானந்த வெள்ளம் வருக
அனந்த கல்யாண மேருகிரி வருகவே
அங்கை ஆமலகம் வருக
சிந்தையில் மகோதயம் செய்திருளை நீக்கிடும்
சிவஞான பாநு வருக
செனன வெப்பந் தணிக்கும் கோடிமதி வருக
தித்திக்கும் அமுதம் வருக
எந்தையே வருக எனையீன்ற தாயே வருக
என் கண்மணி வருக வருக
என் அனந்தம் கோடி மன்மதாகாரமாம்
என்றும் இளையோன் வருகவே
மைந்தனே வருக மணியே வருக வள்ளலே
வருக வைப்பே வருகவே
மாயூரநகர் மேவு கேயூர மணிபுய
மயூர வாகனன் வருகவே.



## ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகள் திருப்புகழ்



*மாயூரம் என்னும்—சிகண்டியூர்.*

அமுதினை மெத்தச் சொரிந்து மாவின
திினியப ழத்தைப் பிழிந்து பானற
வாஞெடு தித்தித் தகண்ட ளாவிய (விதழாராய்)

அழகிய பொற்றட்டி ஞெண்டு வேடையின்
வருபசி யர்க்குற்ற வன்பி ஞுலுண
வருள்பவ ரொத்துத் தளர்ந்த காமுகர் (மயல்தீரக்)

குமுதம் விளர்க்கத் தடங்கு லாவிய
நிலவெழு முத்தைப் புனைந்த பாரிய
குலவிய சித்ரப் ப்ரசண்ட பூரண (தனபாரக்)

குவடிள கக்கட் டியுந்தி மேல்விழு
மவர்மய லிற்புக் கழிந்த பாவியை
குரைகழல் பற்றிப் புகழ்ந்து வாழ்வுற
(அருள்வாயே)

வமிசமி குத்துப் ப்ரபஞ்சம் யாவையு
மறுகிட வுக்ரக் கொடும்பை யானபுன்
மதிகொ டழித்திட் டிடும்பை ராவணன் (மதியாமே)

மறுவறு கற்பிற் சிறந்த சீதையை
விதனம் விளைக்கக் குரங்கி ஞலவன்
வமிச வறுத்திட் டிலங்கு மாயவன் (மருகோனே)

எமதும லத்தைக் களைந்து பாடென
அருள அதற்குப் புகழ்ந்து பாடிய
இயல் கவி மெச்சிட் டுயர்ந்த பேரருண்
(முருகோனே)

எழில்வளை மிக்கத் தவழ்ந்து லாவிய
பொனியது தெற்கிற் றிகழ்ந்து மேவிய
இணையிலி ரத்னச் சிகண்டி யூருறை (பெருமாளே.)

## அபயாம்பிகை சதகம்.

---

அழியச்சனன வலைமுழுது மலையு
மனத்தை நிலைநிறுத்தி
யாதாராதியடி நடுவுளருணு
சலத்தின் வேரினுள்ளே
சுழியைத்திறந்து வாயுவதாற் சுடரே
சகபூரகத்தாலுந்
தோன்றும் கும்பகாதியுடன் சோதி
படரு ஞானவெளி
விழியுந் திழக்கு மதிக்குழம்பு மிகுந்து
சுரக்கு நவக்கிரக
வெளியே மேலே வெளிபடர்ந்து விம்மித்
தனையே யாண்டருள்வாய்
வழியைப் பொருத நாயடியேன் மனத்தா
மரையுணீ வருவாய்
மயிலாபுரியில் வளரீசன் வாழ்வே
அபயாம்பிகைத் தாயே.

---

## அபயாம்பிகை சதகம்

இந்நூலை இயற்றியவர் இவ்வூரையடுத்த நல்லத்துக்குடியில் வாழ்ந்த ஐயாவையர் என்ற கிருஷ்ணய்யர் என்பவர். இவர் வாழ்க்கை வரலாறு மேற்குறிப்பிட்ட பிறகுறிப்பில் காணப்படுகிறது.

## ஐயடிகள் காடவர்கோனயனர் பாடல்—வெண்பா.

குயிலொத்திருள்குஞ்சி கொக்கொத்திருமல்
பயிலப்புகாமுன்ன நெஞ்சே—மயிலைத்
திருப்புன்னையங் கானல் சிந்தியாயாகி
லிருப்பின்னையங்காந் திளைத்து.

## பழைய மாயூர புராணம்

இது 360 ஆண்டுகட்கு முன்னர் பொன்விளைந்தகளத்தூர் ஆதியப்ப நாவலர் என்பவரால் இயற்றப்பட்டது.

## புதிய மாயூர புராணம்

இப்புராணத்தைத் திரிசிரபுரம் மகாவித்வான் திரு மீனாட்சி சுந்தரம் பிள்ளையவர்கள் 72 ஆண்டுகளுக்குமுன்பு பாடியருளினர். இப்புராணம் 64 படலங்களுடையது. 1894 செய்யுட்களை உடையது.

## திருமயிலை வெண்பா அந்தாதி.

நீயே யெனக்கிந் நிலத்தி லன்னை பிதா
நாயே னுனக்குரிய நன்மகவாம்—பேயான
பிள்ளையெனிற் ருய்மறுத்த நீதியோ பெட்பறுசீர்
வெள்ளை விடையானே விளம்பு.

## திருமயிலைத் திரிபந்தாதி.

புரந்தர னுன்முகன் மால்முதற் றேவர்தம் போகமெலாம்
நிரந்தர மன்றுன் னருள்தரு விடே நிலைப்பொருளாம்
தரந்தர மென்றுணர்ந் துன்னிரு தாமரைத் தாள்பரவ
வரந்தர வேண்டுவன் மாயூரநாத வலம்குறித்தே.

இந்நூலை இயற்றியவர் அரங்கநாதபுரத்தில் வசித்து வரும் V. முத்துசாமி அய்யர் M.A.L.T. அவர்கள்.

மாயூரத்தல வரலாறு முற்றிற்று.

